REGD No. TN MS (C) 244 — ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) — Phone: 812818 — 4 பக்கம் விலை 30 காசு

**இலக்கியம்**

எந்தஇலக்கியமானாலும் அதன் கருத்தை, அது தரும் பாடத்தை போதனையை, நல்லறிவைப் பொறுத்துத் தான் அதன் தேவை, அதன் சிறப்பு அமையும்.

பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**சமுதாயமலர்ச்சி**

சமுதாயத்தில் மலிந்துள்ள மூட நம்பிக்கைகள் உயர்வு தாழ்வு என்று கற்பிக்கும் பேதங்கள் ஒழிக்கப்படவேண்டும்.

தந்தை பெரியார்

மலர்: 3 — சென்னை 4—8—1979 சனி — (★) ❋ ● ❋ (★) — வெளியூர் 5--8--1979 ஞாயிறு — (●) — இதழ்: 287



## நடிப்பிசைப்புலவர் நினைவைப் போற்றுவோம்!

கலையால் மக்களின் கவலையைத் தீர்க்க மட்டுமல்ல. தமிழகத்தின் நிலையையும் உயர்த்த முடியும் என்று நிரூபித்த எங்கள் இதய தெய்வம் பேரறிஞர் அண்ணாவின் நெஞ்சங் கவர்ந்த அன்புத்தம்பியே!

கலையையே தனக்காக என்று கருதி 'கலை'யாக இருந்தவர்கள் நடுவில். கலை மக்களுக்காக என்று கருதி, தன்னையே கழகத்தின் இலட்சியப் பணிக்குத் தந்த 'சந்தனக்கட்டை' நடிப்பிசைப் புலவரே!

அண்ணாவை உயிராகவும், கழகத்தையே உடலாகவும் கருதிய திராவிடர் இயக்கக் கலைஞர் நடிப்பிசைப் புலவரே!

இசைபட வாழ்ந்த நடிப்பிசைப் புலவரே... உங்கள் இனிய நினைவுகள் என்றும் எங்கள் இதயத்தில் நிறைந்திருக்கும்!

## திருச்சியில் புரட்சித்தலைவர் சிறப்பான வரவேற்பு

திருச்சி, ஆக. 4- புதுக்கோட்டை பெரியார் விழாவில்கலந்துகொள்வதற்காக செல்லும்வழியில் முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை ரயில் மூலம் திருச்சி வந்து சேர்ந்தார்.

அவருக்கு திருச்சி ஜங்ஷனில் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

வழக்கறிஞர் நல்லுசாமிநாதன், கதர்வாரிய உறுப்பினர் ஏ. சீனிவாசன், தென்னூர் கிருஷ்ணமூர்த்தி உட்பட ஏராளமான கழகத் தோழர்களும் உயர் அதிகாரிகளும் முதல்வரை வரவேற்றனர்.

இன்று புதுக்கோட்டை பெரியார் விழாவிலும் நாளை கடலூர் பெரியார் விழாவிலு புரட்சித்தலைவர் பங்கேகிறார்.

## ஜனதாவிலிருந்து பனார்சிதாஸ் நீக்கம்

லக்னோ, ஆக. 4-உத்தர பிரதேச முதல்வர் பனார்சிதாஸ் ஜனதாக்கட்சியின் சாதாரண உறுப்பினர்பதவியிலிருந்து நீக்கப்பட்டார்.

உத்தரப்பிரதேச சட்டசபை ஜனதாத் தலைவர் ஆகஸ்டு 9-ந்தேதி தேர்ந்தெடுக்கப்படுவார்.

★ தமிழக மக்கள் கருணாநிதியின் போராட்டத்தை முறியடித்தே தீருவார்கள்

★ பின்தங்கிய -பிற்படுத்தப்பட்டோர் கருணாநிதி- தயாரிக்கும் போர்வாள்களை முனை மழுங்கச் செய்வார்கள்

# கருணாநிதிக்கு நாவலர்சாட்டை

**சென்னை, ஆக. 4---தமிழக மக்கள் கருணாநிதியின் போராட்டத்தை எதிர்த்து முறியடித்தே தீருவார்கள். அவர் தயாரித்துக் கொண்டிருக்கும் போர்வாள்கள் ஒவ்வொன்றையும் முனைமழுங்கச் செய்யும் முயற்சியில் பின்தங்கிய - பிற்படுத்தப்பட்டோர் முழுமூச்சுடன் ஈடுபட்டுள்ளார்கள் என்று கருணாநிதிக்கு கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் காட்டமாக பதிலளித்துள்ளார்.**

'மன்றம்' இதழில் டாக்டர் நாவலர் எழுதியுள்ள கட்டுரையில் கூறியிருப்பதாவது:

'புரட்சித்தலைவர் அவர்களின் ஆட்சி புகழோடும், பெருமையோடும் விளங்குகிறதே! அதனை எல்லா நாட்டினரும், எல்லா மாநிலத்தினரும், எல்லா நன்மக்களும் போற்றியும் புகழுகிறார்களே! அதனிடத்தில் பொதுமக்கள் முழு நம்பிக்கையும், நன்மதிப்பையும், வைத்திருக்கிறார்களே! எத்தனையோ போராட்டங்கள் நடத்தியும் அதனை ஆட்டவோ, அசைக்கவோ முடியவில்லையே'!

என்றெல்லாம் எண்ணி எண்ணி டாக்டர் கலைஞர் அவர்கள் பொறாமையால் பொறி கலங்கி, நெறி மயங்கி, ஓயாமல் புலம்பிக்கொண்டேயிருக்கிறார்; போராட்டத்திற்கு மேல் போராட்டம் நடத்திக் கொண்டேயிருக்கின்றார்.

இந்த வேளையில் ஏதேனும் ஒரு போராட்டத்தை நடத்தியே தீர வேண்டும் என்ற எண்ணத்தில் கலைஞர் அவர்கள், பிற்படுத்தப்பட்டோர் பிரச்சினையைத் தவறாகவும், தாறுமாறாகவும் கொண்டு போர்க்கொடியை உயர்த்தியுள்ளார்.

"பொதுக் குழுவைக் கூட்டுவோம், போர்க்கொடியை உயர்த்துவோம்!" என்றார். அதன்படி பொதுக்குழுவைக் கூட்டினார்; போர்க்கொடியையும் உயர்த்திவிட்டார்.

கலைஞர் அவர்கள் 22-7-79 அன்று விருதுநகர் கூட்டத்தில் பேசும்போது:

"புதிய உத்தரவினை எம்.ஜி.ஆர். அரசுதிரும்பப் பெற வேண்டும்.

இல்லை என்றால், அவருடைய ஆட்சியைத் திரும்பப் பெறும் உத்தரவைத் தமிழக மக்கள் பிறப்பிப்பார்கள்.

இதனை எம். ஜி. ஆர். சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

தமிழகமக்களின் எதிர்ப்பைச் சந்தித்துத்தீர வேண்டும்.

தமிழக மக்கள் உயிரைப் பற்றிக் கவலைப்படாமல், யுத்த களத்தில் இறங்குவார்கள்.

அந்த நாள் என்றுவது ஒரு நாள் குறிக்கப்படும்.

அதற்கான போர்வாள் தயாரிக்கப்படுகிறது!"

என்று போர்முரசுகொட்டியுள்ளார்,

### முற்போக்கு ஆணை

பிற்படுத்தப்பட்ட வகுப்புமக்களில் பொருளாதாரத்தால் தாழ்ந்து ஆனால், தகுதியால் உயர்ந்து விளங்குபவர்களுக்குத்தான் கல்வித் துறையிலும், அரசு வேலை வாய்ப்புக்களிலும் 31 சதவிகித ஒதுக்கீடு வழங்கப்படவேண்டும்என்றுபுரட்சித் தலைவரின் அரசு பிறப்பித்துள்ள ஆணை நியாயமானது- நேர்மையானது- நாணயமானது- முற்போக்கானது ஆகும். எனவே அது நடைமுறைபடுத்தப்பட வேண்டும் என்று நல்லவர்களெல்லாம்வற்புறுத்துகிறார்கள்; பிற்படுத்தப்பட்டவர்களில் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களெல்லாம் அதனைப்போற்றி வரவேற்கிறார்கள்.

இந்த ஆணையால் புரட்சித் தலைவரின் ஆட்சியை மேலும் பல்லாண்டு காலம் தொடர்ந்து வலிவுபடுத்தும் எண்ணத்தை தமிழ்ப் பெருங்குடி மக்கள் பெற்றிருக்கிறார்கள்.

புரட்சித்தலைவர் அவர்கள் பிற்படுத்தப்பட்டவர்களில் மிகவும் பின்தங்கியவர்களுக்கு வாழ்வளிக்க வேண்டும் என்று நீடு சிந்தித்துத்தான் புதிய ஆணையைப் பிறப்பித்துள்ளார்.

இந்தப்புதிய ஆணையைப் பிறப்பித்ததால், புரட்சித் தலைவர் அவர்கள் தமிழக மக்களின் ஆதரவைவும், வரவேற்பையும் நாள்தோறும் அளப்பரிய முறையில்பெற்றுக்கொண்டு வருகின்றார்.

தமிழகமக்கள் கலைஞரின் போராட்டத்தை எதிர்த்து முறியடித்தே தீருவார்கள் என்ற நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

கலைஞரின் போராட்ட முயற்சிகள் அனைத்தும் வழக்கம்போல் அடியற்று வீழ்ந்து, என்றேனும் ஒரு நாள் அழிந்தொழிந்து போகும் என்ற உறுதிப்பாடு தமிழ்மக்கள் உள்ளத்தில் தோன்றியிருக்கிறது.

கலைஞர் அவர்கள் தயாரித்துக் கொண்டிருக்கும் போர்வாள்கள் ஒவ்வொன்றையும் முனை மழுங்கச் செய்யும் முயற்சியில் பின்தங்கிய- பிற்படுத்தப்பட்டோர் முழு மூச்சுடன் ஈடுபட்டுள்ளார்கள்.

கலைஞரின் போர் முரசுக்கு எதிராக மேற்கூறப்பட்ட நிலைமைகள்தாம் உருவாகியிருக்கின்றன.



கலைஞர் அவர்கள் விருதுநகர் கூட்டத்தில், பேசிய பேச்சில் பல உண்மைகளை மறைக்கிறார்- பல பொய்மைகளைப்புனைகிறார்.

"அண்ணா இறந்த பிறகு பெருஞ்சுமைகள் என்னுடைய தோளில் சுமத்தப்பட்டன" என்று கூறியுள்ளார்.

### நாடு நன்கு அறியும்

இது எவ்வளவு பெரிய உண்மைக்கு மாறானகூற்று என்பதை எல்லோரும் நன்கு அறிவர். கழகத் தோழர்களும், பொதுமக்களும் முதலமைச்சர் பதவி என்னும் பெருஞ்சுமையைஇவரதுதோளில் தூக்கி வைக்க முயன்றதைப் போலவும், இவர் அதனை விரும்பாதது போலவும், மற்றவர்கள் இவரைவற்புறுத்தி சுமையைச்சுமக்கவைத்தது போலவும் பேசியுள்ளார். கலைஞர் அவர்கள் அறிஞர் அண்ணா அவர்கள் நோய்வாய் பட்டிருந்த போதும், அவர் மறைந்தவுடனும் முதலமைச்சர் பதவியைப் பெற எப்படிப்பட்ட தகாத முறைகளையெல்லாம் கையாண்டார் என்பதை நாடு நன்கு அறியும்- நல்லவர்களெல்லோரும் தெளிவாக உணருவார்கள்.

"நான் எத்தனையோ சாதனைகளைச் செய்திருக்கிறேன். இருந்தும் என்னைக் குற்றவாளி ஆக்கினார்கள் என்றால், பின் தங்கிய மக்களுக்கு நான் சலுகைகள் அளித்ததுதான்" என்று கலைஞர் அவர்கள் அந்தக் கூட்டத்தில் கூறியுள்ளார்.

நீதிக்கட்சியைச் சார்ந்த அமைச்சர்களும் காங்கிரசு

(2-ம் பக்கம் பார்க்க)




## 'கல்வி சிறந்த தமிழ்நாடு'

அவன் பேர் சந்தனன்!
பாடலிபுரத்தின் அரசிளங் குமரன்!
'கல்வி' அவனுக்குக் கசந்தது! இளமைப் பொலிவும்-அழகிய உருவும் இருந்தும் - கல்லாமகனாகிவிட்டானே என அவன் தந்தை வேதனையுற்றான்! ஒரு நாள்- மனங்கனன்று மகனை ஏசினான்!
தந்தை சொற் பொறுக்காத தனயன் நாட்டை விட்டே வெளியேறி விட்டான்.
இன்னொரு நாடு!
அந்நாட்டு மன்னன் பெற்ற மலர்க்கொடியின் பெயர் 'ஏலங்குழலாள்' என்பது!
உப்பரிகையில் அவள் நின்றிருந்தபோது-இளவரசன் சந்தனன் அவ்வழியே சென்றான்!
அவள்-கண்வழிப் புகுந்து கருத்தில் நிறைந்தான்!
இதயம் கவர்ந்த அந்த வழிப்போக்கன் சென்று மறையுமுன்பே-தன்மனத்தை அவனுக்கு உணர்த்த எண்ணினாள்-
சேற்கெண்டை விழிகொண்ட அந்தச் சேயிழை!
"இன்று-நள்ளிரவில்-ஊருக்கு வெளிப்புறத்தில்-ஆலமடித்தடியில்-ஆருயிரே உங்களைச்சந்திக்கிறேன்; இப்படிக்கு, ஏங்கித் துடிக்கும்-உங்கள்-ஏலங்குழலாள்" என்னும் வாசகங்கள் தாங்கிய ஓலை ஒன்று அவன் முன்பு வந்து விழுந்தது.
அவனோ எழுதப் படிக்கத் தெரியாதவன்! எனவே-எடுத்த ஓலையை-அவன் தங்கியிருந்த சத்திரத்திலுள்ள தொழு நோயாளி ஒருவனைப் படித்துச் சொல்லக் கேட்டுக் கொண்டான்!
அந்தத் தொழு நோயாளி வஞ்சகன்!
கடிதம் எழுதிய காதற்கிளி - அந்நாட்டு இளவரசி என்பது என்பது அவனுக்குப் புரிந்தது.
"என் நாட்டில் நுழைய என்ன துணிச்சலடா உனக்கு? நாளை மீண்டும் உன்னைக் கண்டால்- அதன் பின் உன் தலையும் உடலும் தனித்தனியாகும். இப்படிக்கு- உன் எதிரியின் மகள் ஏலங்குழலாள்" என எழுதப்பட்டிருப்பதாகச் சொன்னான்!
கேட்ட இளவரசன்- பதைபதைத்தான்! தப்பித்துக் கொள்ளும் வழி தேட ஆரம்பித்தான்!
அன்று நள்ளிரவில்-இளவரசி குறிப்பிட்ட இடத்தில் வெறி ததும்பும் கண்களோடு அந்தத் தொழு நோயாளி நின்றான்!
வந்த இளவரசி-அவனல்ல இவன் என்பதை அறிந்தாள்! தன் கற்பைக் காக்கும் வழிதெரியாது திகைத்தாள்!
வைரத்தை உடைத்து வாயில் போட்டுக்கொண்டு செத்தாள்!
நடந்ததை-இருநாட்களுக்குப் பிறகு 'சந்தனு' அறிந்தான்!
தன் 'கல்லாமை'யை நொந்தான்!
இனித் தான் இல்லாதிருப்பதே நலமெனக் கருதி-உயிர் துறந்தான்!
'பேய்' வடிவாய் இவன் உலவும்போது - இவனுக்காக பெண்பாற் புலவர் 'ஔவையார்' ஒரு வெண்பாப் பாடினார்.

'வெண்பா இருகாலில் கல்லானை, வெள் ஓலை
கண் பார்த்துக் கையால் எழுதானைப்-பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர் நகைக்கப் பெற்றாளே
எற்றோ மற்றெற்றோ மற்றெற்று'

கல்வியின் சிறப்பையும் - கல்லாமையின் இழிவையும் விளக்க - இதுபோன்ற எத்தனையோ கதைகளையும் விளக்கங்களையும் கூறிக் கல்வி கற்கும் வசதி வாய்ப்பற்ற காலத்திலேயே அதைப் பெற ஊக்கமும்-உற்சாகமும் ஊட்டினர் தமிழ் முன்னோர்.
பிறப்பாலோ - குலச் சிறப்பாலோ - செல்வ நிறைவாலோ - கிடைப்பதல்ல பெருமை!
கற்றலே சிறப்பு! பெருமை! அதுவே உயர்வு தரும்! புகழ் தரும் என்பதற்கு - ஆயிரக்கணக்கான மேற்கோள் விளக்கங்கள் எடுத்துரைக்கப்பட்டன!
எல்லோரும் கல்வி கற்கும் நிலை மலர - கல்லார் இல்லை எனும் கணக்குக் கிடைக்க பண்பையும்-பயனையும் தருவதாகக் கல்வி அமைய- இன்று அரசு மேற்கொள்ளும் முயற்சிகள பலப்பல!

**புரட்சித்தலைவர் அவர்களது சீரிய தலைமையில்-அருமைச் சகோதரர் மாண்புமிகு அரங்கநாயகம் அவர்கள் கல்வித்துறைப் பொறுப்பேற்று-**

(2-ம் பக்கம் பார்க்க)

## மத்திய மந்திரி சபையில் அகாலி தளம் சேர முடிவு

**புதுடெல்லி, ஆக 4- மத்திய மந்திரி பதவி ஏற்க அகாலிதளக் கட்சித் தலைவர்கள் சம்மதம் தெரிவித்துள்ளனர்.**

அகாலி தளக்கட்சிக்கு நாடாளுமன்றத்தில் 9 உறுப்பினர்கள்இருந்தனர். சமீபத்தில் ஒரு எம். பி. மரணம் அடைந்ததைத் தொடர்ந்து தற்போது அதன் பலம் 8.

அமைச்சரவையில் சேருமாறு அகாலிதளக் கட்சியை சரண்சிங் அழைத்திருந்தார்.

அகாலிதள எம். பிக்கள் நேற்று கூடி இது பற்றி ஆலோசனை நடத்தினார்கள்.

மந்திரி பதவி ஏற்கலாம் என்பதில் அகாலிதள எம். பி. க்களிடையே கருத்து வேறுபாடு இல்லை. ஆனால் யார் யார் மந்திரி ஆவது என்பதில் அவர்களுக்குள் கருத்து வேற்றுமை உள்ளது.

சரண்சிங்கிடம் அகாலி தளதலைவர்கள் ஆலோசனை நடத்தியபின் அமைச்சர்கள் பற்றி இறுதி முடிவு எடுக்கப்படும்.

20ந் தேதி நாடாளுமன்றம் கூடுகிறது. அப்போது தனக்கு மெஜாரிட்டி இருப்பதை சரண்சிங் நிரூபிக்க வேண்டும். அதற்கு முன் அகாலி தளத்தை அமைச்சரவையில் சேர்ப்பதில் சரண்சிங் தீவிரமாக இருக்கிறார்.

### இன்று பதவி ஏற்பு

சுவரண்சிங் காங்கிரஸ் எம் பிக்கள் 9 பேர் இன்று இணை (ராஜாங்க) அமைச்சர் பதவி ஏற்கிறார்கள். இன்று மாலை 3 மணிக்குப் பதவி ஏற்பு விழா ஜனாதிபதி மாளிகையில் நடக்கிறது.

இந்த 9 மந்திரிகளையும் சேர்த்தால் மத்தியஅமைச்சர்களின் எண்ணிக்கை 36 ஆகிறது.

### யார் யார்?

இன்று மாலை அமைச்சர் பதவி ஏற்கும் சுவரண்சிங் காங்கிரஸ் எம். பிக்கள் பெயர் வருமாறு:

1. கே.கோபால் (தமிழ் நாடு)
2. ராச்சையா (கருநாடகம்)
3. எம் வி கிருஷ்ணப்பா (கருநாடகம்)
4. அங்கிநீடு பிரசாத் ராவ் (ஆந்திரா)
5. நாதுராம் மிர்தா (ராஜஸ்தான்)
6. பி. எம். சாயீத் (லட்சத்தீவு)
7. வேதபிரத பருவா (அஸ்ஸாம்)
8. சவுகத்ராய் (மேற்கு வங்காளம்)
9. கிஷோர்சந்திர தேவ் (ஒரிசா)

## கழக எம்.எல்.ஏ. வீடு தீக்கிரை

சேலம், ஆக. 4- சேலம்ஒன்றுவது தொகுதி சட்டமன்ற கழக உறுபினர் வரதராசன் வீட்டில் நேற்று (வெள்ளிக்கிழமை) தீ விபத்து ஏற்பட்டது.

சேலத்தை அடுத்த வேப்பம்பட்டி தானத்தில் சட்டமன்ற உறுப்பினர் வரதராசன் இல்லம் இருக்கிறது. இங்குதான் இந்த தீ விபத்து ஏற்பட்டது,

தீ விபத்தில் ஒரு லட்சம்ரூபாய்க்கும் அதிகமான நூல்களும், வீடும் எரிந்து சாம்பலாயின. தீ விபத்து பற்றி தகவல் கிடைத்ததும் சேலத்திலிருந்து தீயணைப்பு படையினர் விரைந்து வந்து தீயை அணைத்தனர். தீவிபத்துக்கான காரணம் தெரியவில்லை.

பாக்கூர் சுப்பிரமணியம் எம்.எல்.ஏ., தகவல்

# சென்னை செங்கை மாவட்ட பால்வளம்: ரூ. 40 கோடி புரட்சித்தலைவர் ஒதுக்கீடு

**சென்னை, ஆக. 4- சென்னை செங்கை மாவட்டங்களின் பால் பெருக்குத் திட்டத்திற்காக முதல்வர் புரட்சித் தலைவர் அரசு 40 கோடி ரூபாய் ஒதுக்கியுள்ளது என்று சென்னை-செங்கை மாவட்ட கூட்டுறவு பால் விற்பனை ஒன்றிய சங்கத்தலைவர் பாக்கூர் சுப்பிரமணியம் எம். எல். ஏ. கூறினர்.**

சென்னை - செங்கை மாவட்ட கூட்டுறவு பால் விற்பனை ஒன்றியத் தலைவரும் சட்டமன்ற உறுப்பினருமான பாக்கூர் சுப்பிரமணியம் 'பால்வளம்' என்ற தலைப்பில் வானொலியில் உரை நிகழ்த்தினர்.

அவர் பேசும்போது கூறியதாவது:-

பாலும், பழமும் பணக்காரனுக்குத்தான் சொந்தம் என்ற நிலைமாறி பாமரரும் விரும்புகின்ற ஒரு அத்தியாவசியமான தேவையென இன்றைய சமூகம் கருதத்தொடங்கி விட்டது.

சென்னையினுடைய தேவை அன்றாடம் ஏறத்தாழ 10 லட்சம் லிட்டர் பால் அளவாகும். சென்னையும் அதைச் சேர்ந்த செங்கல்பட்டு மாவட்டமும் தினம் கொள்முதல் செய்யும் பாலின் அளவு ஏறத்தாழ 20 ஆயிரம் லிட்டர்.

இன்றைய தினத்தில்கூட சென்னை மாநகரத்தைச் சேர்ந்த தனிப்பட்ட வியாபாரிகள் செங்கல்பட்டு மாவட்டத்திலிருந்து பாலை தினந்தினம் சுமார் 70ஆயிரம் லிட்டர் கொள்முதல் செய்து லாபகரமாக வியாபாரம் செய்கின்றனர்.

கடந்த இருபது முப்பது ஆண்டுகளாக செங்கல்பட்டு மாவட்டத்தில் மட்டும் சுமார் 700க்கு மேற்பட்ட பால் சங்கங்கள் தொடங்கப்பட்டன. ஒவ்வொரு ஆண்டும், சங்கங்களுக்கு, கறவை மாடுகள் வாங்க கோடிக்கணக்கான ரூபாய் கடனுக வழங்கப் பட்டுள்ளது. இருந்தும், 30 ஆயிரம் லிட்டருக்கு மேல் பால் உற்பத்தியைப் பெருக்க இயலாததற்குக் காரணம் தனிப்பட்ட வியாபாரிகளின் போட்டி மனப்பான்மையே.

## இயற்கை சூழ்நிலை

கிராமத்தில் வாழ்கின்றவர்களை சுரண்டுகின்ற மனப்பான்மை கொண்ட சிலர் நன்கு பயன்படுத்திக் கொள்கிருர்கள். மற்ற மாவட்டங்களை விட செங்கை மாவட்டத்திற்கு இயற்கையாகவே மாடுகளைவைத்து பராமரிக்கக்கூடிய சூழ்நிலை இருக்கிறது. மாடுகளைபராமரிக்கின்றதன்மையை செங்கை மாவட்டத்திலுள்ள கிராமத்திலே வாழ்கின்ற விவசாயப் பெருமக்கள் இன்னும் நன்கு உணர வேண்டிய நிலையில் இருக்கிருர்கள்.

பால் வளத்தைப் பெருக்க மூன்று சிறந்த வழிகளை மற்ற மாவட்டங்களைப்போல் சென்னையைச் சுற்றியுள்ள செங்கை மாவட்டம் கையாண்டாலொழிய சென்னையினுடைய தேவையைப் பூர்த்தி செய்வது இயலாத காரியம்.

செங்கல்பட்டு மாவட்டத்தில் விவசாய பெருமக்களின் பொருளாதாரத்தை மேம்படுத்தவும், சென்னை நகர மக்களின் பால் தேவையை மனதில் கொண்டும், 1937-ம் ஆண்டு தொடங்கப்பட்ட சென்னை கூட்டுறவு பால் வழங்கு ஒன்றியத்தை பல இன்னல்களுக்குமிடையே தொடர்ந்து செயல்பட வைப்பதற்கு பல நல்லோர்களும், அதிகாரிகளும், மட்டற்ற சேவை செய்துள்ளனர்.

பால் உற்பத்தியாளர்களுக்கு புதிய வாழ்வு அளிக்கும் புனித இடமாக கருதப்படும் குஜராத் மாநிலம், கெய்ரா மாவட்டத்தை சார்ந்துள்ள 'ஆனந்த்'திற்கு இந்த "சென்னை,கூட்டுறவுபால், விநியோக ஒன்றியம்" தான் வழிகாட்டிஎன்பதை எண்ணும்போது,எவ்வளவு சிறப்பான சாதனையை செங்கை மாவட்டம் துணை கண்டத்தினுடைய பால் வளத்திற்குவழிகாட்டியாக இருக்கிறது என்பது சரித்திரச் சான்ருகும்.

## வளர்ச்சி அடிப்படை

கிராமிய பொருளாதார வளர்ச்சியின் அடிப்படையில்தான் இந்த நாட்டின் வருங்காலம் உள்ளது என்ற உண்மையை உயிர் மூச்சாக கருதி செயல்படும் இன்றைய தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள் சார்பாக உங்கள் முன் ஒன்றை வைக்கின்றேன்.

கூட்டுறவு என்ருலே அரசியல்வாதிகளின் சுயநலம் கொண்ட கூடாரம் என்ற கடந்த கால எண்ணத்தை மக்களிடையே மாற்றி, பல அரசியல் கட்சிகளைச் சார்ந்தவர்களை, ஒரே அமைப்பினராக பங்கு பெற வாய்ப்பளித்து, மத்திய அரசினுடைய கொள்கைகளையொட்டி கிராமத்தில் வாழ்கின்ற பால் உற்பத்தியாளர்களின் நல்வாழ்வையே மனத்தில் இருத்தி, கண்ணியமான முறையில், பால் உற்பத்தியாளர்கள் ஒன்றியம் உருவாக்கப் பட்டுள்ளது.

பால் வளம் பெருக, பசும் புல் பயிரிடுதல் மிக முக்கியமானதாகும்.

இயற்கையாகவே அதற்கான சுற்றுச் சார்பு செங்கை மாவட்டத்திலே அமைந்துள்ளது.

இந்த மாவட்டத்தின் சிறப்பு- இங்கே 2000க்கு மேற்பட்ட ஏரிகள் உள்ளன. ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட இறவைப் பாசன மின்சார பம்பு செட்டுகள் உள்ளன.

தினம் ரூபாய் 3க்கு குறைந்த வருமானம் உள்ள சிறு விவசாயிகள், மிகச் சிறு விவசாயிகள், விவசாயக் கூலிக் குடும்பங்கள் 5 லட்சத்துக்கு மேல் உள்ளன.

ஆகவே, உழைப்பால் தொழில் செய்து வாழ வேண்டும் என்ற நிலையில் உழைப்பால் பிழைக்கும் வாய்ப்புக்காக இயங்குகின்ற குடும்பங்கள் 5 லட்சத்துக்கும் மேல் உள்ளது.

இவர்களுக்கு எல்லாம் பால் உற்பத்தித் தொழில் என்ற வாய்ப்பிருக்கிறது. பச்சைப் புல்போட்டு மாடுகளைப் பராமரித்தாலே உற்பத்திச்செலவு குறையும். பால் உற்பத்தித் தொழில் லாபகரமாகக் கூட இருக்கும்.

## எது லாபம்?

இதைச் செயல்படுத்த முடியாத நிலையில் பல்லாயிரக்கணக்கான பால் உற்பத்தியாளர்கள் குடும்பங்கள் உள்ளன. பசும் புல்லும், தழையும்எல்லாப் பால் உற்பத்தியாளர்களும் பயன்படுத்தும் வகையில் எல்லாருக்கும் சீராகவும், நிரந்தரமாகவும் கிடைக்கும் வகை செய்தால் லட்சக்கணக்கான தனித்த குடும்பங்களுக்கு புதுவாழ்வு கொடுக்க முடியும்.

ஒரு ஏக்கர் நிலத்தில் பசும் புல்லும் தழையும் பயிர் செய்தால்ஏறத்தாழ 12 கறவை மாடுகளை பராமரிக்க முடியும். நெல்லோ கரும்போபயிரிடுவதைவிட பசும்புல் பயிரிடுவது மிகவும்லாபகரமான விவசாயமாகும்.

ஒரு ஏக்கர் நிலத்தில் கரும்பு பயிர் செய்து அதன் மூலம் கிடைக்கும் நிகர லாபம் ரூ. 1500/- என்ருல் ஒரு ஏக்கர் நிலத்தில் புல் பயிர் செய்து அப்புல்லை விற்ருல் அதில் கிடைக்கும் நிகர லாபம் ரூபாய் 2,500க்கு மேல் ஆகிறது.

கிராமங்களிலே நூற்றுக்கணக்கான கறவை மாடுகள் இருக்கின்றன. வருடந்தவருமல் கன்று போடக்கூடிய இந்த மாடுகளை பயன்படுத்தி உயர்ரக கறவை இன மாடுகளை உற்பத்தி செய்வதின் மூலம் கறவை மாடுகளின் பற்ருக் குறைத் தன்மையினைப்போக்க வழி வகுக்கும்.

## பால் பெருக்கு திட்டம்

'உறைவிந்து முறையை' பயன்படுத்தி தன்னிறைவு பெற்றமாவட்டமாகஇதனை இன்னும் சில ஆண்டுகளில் மாற்ற இயலும் என்று இந்த அரசு நம்பிக்கை கொண்டிருக்கிறது.

பால்வளத்தில் பணி புரிகின்ற அதிகாரிகள் கிராம மக்களின் மேம்பாட்டிற்காக தங்களை அர்ப்பணித்துக்கொண்டு அவர்களின் அறியாமை என்கின்றஇருளைப்போக்கி, பால் கணக்குப்புத்தகங்களுக்குப்பின்னுல்இருக்கும் இதயங்களைப்பார்க்க வேண்டும்.

முதல் பால் பெருக்குத் திட்டத்தின் கீழ் தமிழகம் முதலிடம் பெற்றுத்திகழ்கின்றது. இரண்டாவது கட்ட பால் பெருக்குத் திட்டத்தின் கீழ், சென்னை செங்கை மாவட்டத்திற்கு ரூ. 40-கோடி அளவில் உதவிகள் அளிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. சென்னைமாநகரத்தின் பால் தேவைகள். இந்தத் திட்டத்தின் மூலம் பெருமளவு பூர்த்தி செய்யப்படும் என்பதோடு செங்கை மாவட்ட விவசாயிகளின் பொருளாதார நிலைமையும் சீரடையும்.

பால் வளத்தைப்பெருக்க வேண்டும் என்று எண்ணம் கொள்ளும்போது கால்நடைகளை நம்பி வாழும் பல்லாயிரக்கணக்கானவர்களின் வாழ்வைமறுக்கஇயலாது. பால் கேன்களில் இருக்கும் பாலில் எளிய மக்களின் வருங்காலம் இருக்கிறது. என்பதையும் மறக்க இயலாது.

பால் வளம் பெருக பாதைகளை வகுத்துத் தருவதற்கு மத்திய அரசும், மாநில அரசும் ஒருங்கிணைந்து செயல்படுவது வரவேற்கத்தக்க ஒன்ருகும்.

இவ்வாறு பாக்கூர் சுப்பிரமணியம் எம். எல். ஏ. பேசினுர்.

ஆவடி பயனியர் [illegible] கே. அரங்கநாதன் எம். எல். ஏ. வுக்கு ஆவடி சிவா வாழ்த்துமடல் வாசித்தளித்தார். புலவர் சோமசா, முகவை சுந்தரம், டி. வி. கோபால், தி. கோ. தயாளன் உடன் இருக்கின்றனர்.

---

## எஸ். டி. எஸ். பங்கேற்கும் நில அளவை வரைவாளர் மாநாடு

சென்னை, ஆக. -4 தமிழ்நாடு அரசு அலுவலர் கழகத்துடன் இணைந்த தமிழ்நாடு நில அளவை வரைவாளர் கழகத்தின் முதல் மாநில மாநாடு இம்மாதம் 12-ந் தேதி சென்னையில் நடக்கிறது.

அமைச்சர் எஸ். டி. எஸ். தமிழ்நாடு அரசு அலுவலர் கழக மாநில தலைவர் இரா. முத்தானந்தம் ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர். தமிழ்நாடு முழுவதுமுள்ள நில அளவை வரைவாளர்களும் தமிழ்நாடு அரசு அலுவலர் கழகத்தின் இணைப்புச்சங்கத்தின்பிரதிநிதிகளும் மாநாட்டில் திரளாக கலந்து கொள்வர்.

## நெல்லை அண்ணு தமிழிலக்கிய கழகம்

மேலப்பாளையம், ஆக. 4-நெல்லை நகர் அண்ணு தமிழ் இலக்கியக் கழகக் கூட்டம் நடந்தது.

தலைவராக புலவர் செல்லையா, செயலாளராக அ. முத்துவடிவேல், பொருளாளராக இரா. வெங்கட்ராமன் நிர்வாகக் குழுவினராக 5 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

---

## குன்றத்து விளக்கு...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

**நிகழ்த்தி வரும் கல்வித் துறைச் சாதனைகள்- தமிழகத்தின் வரலாற்றிலேயே ஒளிமயமான திருப்பத்தை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன!**

கல்விக்காக '79-80 ஆம் ஆண்டில் ரூ. 209 கோடி நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. அரசின் மொத்தச் செலவினத்தில் கால் பகுதி கல்விக்காகத்தான்.

கிராமப்புற மக்களுக்குக் கல்லூரிக் கல்வி கிட்டரியதாக இருந்த நிலை நீக்கப்பட்டுவிட்டது.

**மலையை நோக்கி மகமதுவராவிட்டால்- மகமதுவை நோக்கியே மலை செல்வதுபோல்-சிற்றூர் நோக்கிக் கல்லூரிக் கல்வி சென்று சேர்ந்து விட்டது**

இந்த ஆண்டில்-ஆயிரத்துக்கு மேற்பட்ட பள்ளிகள்- மேல்நிலைப் பள்ளிகளாக்கப்பட்டுள்ளன.

பள்ளி இறுதித்தேர்வில் தவறிய பாடங்களில் மட்டும் மீண்டும் எழுதி வெற்றி பெறும் 'கம்பார்ட் மெண்ட்' முறை கொண்டுவரப்பட்டது.

மூன்ருவது வகுப்பு வரையிலும் அனைத்து மாணவர்களுக்கும் தேர்ச்சி வழங்கப்படுவதும்-மேல் நிலைப் பள்ளிகளில் தமிழிலோ ஏனைய சிறுபான்மை மொழிகளிலோ பயிலும் மாணவர்களுக்குக் கற்பிப்புக் கட்டணம் இல்லை என்ற அறிவிப்பும்-

**'கல்வி'யை-ஏழைகளுக்கும் சொத்தாக மாற்ற-எழுதப்பட்ட உயில்கள்**

நாளை கிடைக்கும் பலாப்பழத்தை விட-இன்று கிடைக்கும் களாப்பழமேமேல் என்ருெரு பழமொழியுண்டு.

எந்த அரசியல்வாதியும்-உடனடிப் பயனை எதிர்பார்த்துத்தான் காரியமாற்றுவான்.

ஆனல்-இலட்சிய உணர்வும்-நாட்டுப்பற்றும் கொண்ட புரட்சித்தலைவரின் அரசு வரப்போகும் தலைமுறைகளுக்குப் பயன் தரப்போகிற 'கல்வி' எனும் கற்பகத்தருவை வளர்ப்பதில் ஆர்வம் காட்டுகிறது.

**'கல்வி சிறந்த தமிழ்நாடு' - எனும் பாரதியின் வாக்கியத்தைப் பொருள் நிறைந்த வாக்கியமாக்குவதில்- அனைத்து மாநிலங்களுக்கும் கல்வி வளர்ச்சியில் போட்டிக்கு அறை கூவல் விடுவதில் - தமிழக அரசு முனைந்து நிற்கிறது!**

**அதில் வெல்வது உறுதி!**

---

மயிலைத் தொகுதி

## மகளிர் அமைப்பாளர் ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஆக. 4- மயிலை தொகுதி வட்ட மகளிர் அமைப்பாளர்களின் ஆலோசனைக் கூட்டம் இம்மாதம் 5-ந்தேதி (ஞாயிறு) மாலை 5 மணிக்கு எண் 42 காமராஜர்சாலையில் உள்ள இல்லத்தில் நடக்கிறது. தென் சென்னை மாவட்ட மகளிர் அமைப்பாளர் சந்திரா கூட்டத்தில் கலந்து கொள்கிருர். மயிலைத் தொகுதி வட்ட மகளிர் அமைப்பாளர்கள் அனைவரும் கூட்டத்தில் தவருது கலந்து கொள்ளுமாறு மயிலைத் தொகுதி மகளிர் பிரிவு அமைப்பாளர் எஸ்.ராதாபாய் கேட்டுக் கொண்டுள்ளார்.

---

# நாவலர் சாட்டை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கட்சியைச்சார்ந்த அமைச்சர்களும், பேரறிஞர் அண்ணு அவர்களும் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு படிப்படியாக, அடுத்தடுத்து எவ்வளவோ நன்மைகளையும், சலுகைகளையும் செய்துள்ளார்கள். அவற்றைப் பின்பற்றி கலைஞரும் நன்மைகளைச் செய்தார். இப்பொழுது புரட்சித்தலைவரும் முன்னோர் காட்டிய வழியைப் பின்பற்றி, பின் தங்கிய பிற்படுத்தப்பட்ட மக்கள் பல வழிகளிலும் முன்னேற பல நன்மைகளைச் செய்து வருகிருர்.

பிற்படுத்தப்பட்ட மக்களின் தனிக்காவலர் தாம் தான் என்பது போலவும், அதனுல் பல கடினங்களைத் தாங்கிக்கொள்ள வேண்டி வந்தது போலவும் சொல்லிப் பொது மக்களின் இரக்கத்தைப் பெறலாம் என்று கலைஞர் எண்ணுகிருர்.

## கருணாநிதி குற்றவாளி ஆனதெப்படி?

கலைஞர் அவரது நேர்மையற்ற - நாணயமற்ற- ஒழுக்கமற்ற - பண்பற்ற-சட்டத்திற்கு மாறுபட்ட-செயல்களால் குற்றவாளியாக ஆனுரே தவிர, பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு நன்மைகள் செய்த காரணத்தால், குற்றவாளியாக ஆக்கப்படவில்லை. அப்படி ஆக்கப் பட்டிருந்தால் எல்லாத் தமிழக முதலமைச்சர்களும் ஆகியிருக்க வேண்டும்.

புரட்சித்தலைவரின் ஆட்சியை எதிர்த்து, எந்த வகையிலும்எப்படியேனும் எப்போதும் போராடிக் கொண்டே இருக்கவேண்டும் என்ற முறையில் பிற்படுத்தப்பட்டோர் பிரச்சினையைஒரு சாக்காக வைத்துக்கொண்டு இப்பொழுது போராட்டம் நடத்த கலைஞர் முற்பட்டிருக்கிருரேயல்லாமல் வேறல்ல. "நான் என் வாழ்க்கையைப் போர்க்களமாக ஆக்கிக் கொண்டவன். நாங்கள் ஏதோ ஒரு வேளை அறிவித்துதான் போராடவேண்டும் என்பது இல்லை. வாழ்நாள் எல்லாம் போராட்டந்தான்" என்று கலைஞர் அவர்கள் விருதுநகர் பொதுக்கூட்டத்தில், அவரது நிலையை ஒப்புக் கொண்டு பேசியுள்ளார்.

## வியப்பு இல்லை

வாழ்க்கையையும், வாழ்நாளையும் போராட்டக் களமாக ஆக்கிக் கொண்டிருக்கும் டாக்டர் கலைஞர் புதுப் புதுப் போராட்டங்களைத் தேடிப் பிடித்து நடத்தி வருவதில் வியப்பில்லை!

"நான் போராட்டத்தைத் தேடி அலைய மாட்டேன்: ஆனுல் தேடி வருகின்ற போராட்டத்திலிருந்து ஓடி ஒளியமாட்டேன்" என்பது அறிஞர் அண்ணு அவர்களின் பொன் மொழியாகும். போராட்டங்களைத்தேடித் தேடி அலைவதும், தேடிப் பிடித்த போராட்டங்களை விட்டு ஓடிவருவதும் கலைஞரின் இன்றைய அரசியல் வாழ்க்கையாகி விட்டது.

பிற்படுத்தப்பட்ட மக்களுக்குப் பேராபத்தும் பேரழிவும், பேரிடியும் ஏற்பட்டுவிட்டதாகப் பொய்ப் புலியைக் காட்டிப் புகலும் கலைஞர் அவர்களின் வாதத்தில் நியாயமில்லை என்பதை நாட்டினருக்குச் சுட்டிக்காட்ட வேண்டியது நமது கடமையாகிறது.

புரட்சித்தலைவர் அரசின் புதிய ஆணை அறிஞர் அண்ணுவின் கொள்கையைச் சவக்குழிக்குஅனுப்பி விட்டதாகக் கலைஞர் புகன்றுள்ளார். உள்ளபடியே அறிஞர் அண்ணு அவர்களின் பிற்பட்டோர் நலம் பற்றிய உயர்ந்த கொள்கைக்கு மேலும் வலியூட்டுவதுதான் புதிய ஆணையின் நோக்கமாகும். அந்த நோக்கம் நல்ல முறையில் நிறைவேறி வருவதையும் பார்க்கிறோம். பின் தங்கிய பிற்படுத்தப்பட்ட மக்களின் பெருத்த வரவேற்பைப் பெற்றிருப்பதையும் அறிகிறோம்.

அறிஞர் அண்ணு 1967-ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 23-ஆம் நாள் தமிழக சட்டமன்றத்தில், கல்வி மானியக் கோரிக்கையின் மீது பேசிய பேச்சிலிருந்து சிலகுறிப்புக்களை அறிந்து கொள்வது பயனளிக்கும் என்று கருதுகிறேன்.

## அண்ணு வழியில் புரட்சித்தலைவர்

பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு என்று அளிக்கப்பட்டிருக்கும் 31 சதவிகித ஒதுக்கீட்டில், "ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் பார்க்கக்கூடாது" என்ருர் கலைஞர். ஆனுல் புரட்சித் தலைவர் அவர்களோ, "31 சதவிகித ஒதுக்கீடு ரூ.9000க்கு மேல் ஆண்டு வருமானமுடைய பணம்படைத்த குடும்பத்தினருக்குப் போகாமல் அந்த வருமானத்திற்குக் குறைந்த வருமானமுடைய ஏழைக் குடும்பத்தினருக்குப் போக வேண்டும்" என்று புதிய ஆணையின் மூலம் வாதாடுகிருர்.

புரட்சித் தலைவரின் வாதம் அறிஞர் அண்ணுவின் வாதத்தைப் பின்பற்றியதாகும் என்பதை அறிஞர் அண்ணுவின் கூற்று தெளிவுபடுத்தும். அது வருமாறு:

"பாகுபாடேபார்க்காமல் இருப்பதுநல்லதுதான்.சில விஷயங்களில்பாகுபடுத்தத் தான் வேண்டியிருக்கிறது. நெல்லும்பதரும் ஒன்ருகத் தான் இருக்கும். நெல்லைப் பாகுபடுத்திப் பார்க்கத் தான் வேண்டும்.

கல்லும் அரிசியும் ஒன்ருகத்தான் இருக்கும். கல்லை அரிசியிலிருந்து விலக்கத் தான் வேண்டும்.

ஒரு திட்டத்தை மேற்கொள்கிறபோது நல்லதும் கெட்டதும் கலந்தே இருக்கும். கெட்டதை நீக்கத் தான் வேண்டும்."

கல்விச் சலுகை அளிக்கும் போது, பணக்காரன்- ஏழை என்ற பாகுபாடு செய்யத்தான் வேண்டும் என்பதை அறிஞர்அண்ணு அவர்கள் வலியுறுத்தினுர்.

1967-ம் ஆண்டு ஜூன் திங்கள் 27 ஆம் நாள் அறிஞர் அண்ணு தமிழக சட்டமன்றத்தில் சமூக நீதிக் கொள்கையை விளக்கிப் பேசும்போது:

"சலுகைகள் செய்யப்பட வேண்டுமென்ருல் சமுதாயத்திலுள்ள எல்லோருக்கும் அந்த சலுகை இருக்க வேண்டும் என்பதை சமூக நீதியாக ஒப்புக்கொள்ள மறுக்கிறேன்....

"Equality is not an identity of treatment but the affording of equal opportunities for all"

கந்தனுக்குக் கால்படி என்ருல், கருணுநிதிக்கும் கால்படி என்று அர்த்தம் அல்ல. கருணுநிதி வயிற்றுக்கு அது போதாது. அதைப்போல செய்கின்ற சலுகைகள், சர்க்கார் மூலமாககிடைக்கின்ற சலுகைகள் ஏற்கனவே சமுதாயத்தில் வசதியோடு உள்ளவர்களுக்கும் போய்ச் சேர வேண்டும். அதுதான் சமத்துவம் என்று யாராவது சொல்வார்களானுல், அந்தச் சமத்துவத்தைப்பற்றி- அதனுடைய இலக்கணத்தைப்பற்றி- மறுபடியும் படிக்கவேண்டும் என்று நான் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்...

சமூகத்தில் நலிந்தவர்க்கும், மெலிந்தவர்க்கும் ஊட்டமளித்து, வசதியுள்ளவர்கள் தங்களுடைய ஊட்டத்தைத் தாங்களே பெற்றுக்கொள்ளக்கூடிய முறையில் வழி வகுக்க வேண்டும்.

## முரண்பாடு எது?

சமூகத்தில் நலிந்தவர்க்கும், மெலிந்தவர்க்கும் ஊட்டமளிக்க வேண்டும் என்று அறிஞர் அண்ணு கூறியுள்ள கொள்கைப்படி தான் புரட்சித்தலைவா பிற்படுத்தப் பட்டவர்களிலே ஆண்டு வருமானம் ரூ, 9000க்குக் கீழ உள்ள பின்தங்கியவர்களுக்கு ஊட்டமளிக்க 31 சதவிகித ஒதுக்கீடு முழுவதையும் தந்துள்ளார்.

"வசதியுள்ளவர்கள் தங்களுடைய ஊட்டத்தைத் தாங்களே பெற்றுக்கொள்ளக் கூடிய முறையில் வழி வகுக்க வேண்டும்"

என்று அறிஞர் அண்ணு கூறியுள்ளதைப் பின்பற்றித் தான் புரட்சித் தலைவர் அவர்கள் ரூ. 9000க்கு மேல் ஆண்டு வருமானம் உள்ள பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த வசதி படைத்தவர்கள் தங்களுடைய ஊட்டத்தைத் தாங்களே பெற்றுக் கொள்ளட்டும் என்று ஒதுக்கீட்டுக்கு அப்பால் அவர்களைப் புதிய ஆணையின் மூலம் வைத்துள்ளார். இந்தச் செயல் அறிஞர் அண்ணுவின் கொள்கை வழிபட்ட செயலேயல்லாமல், முரண்பட்ட செயலல்ல.

கலைஞர் அவர்களால் நியமிக்கப்பட்ட சட்டநாதன் குழுவில் இடம் பெற்ற முன்னுள் நீதிபதிகளான திரு. ஏ. என். சட்டநாதன், திரு. எஸ். சின்னப்பன், திரு. எம். ஏ. ஜமால் உசைன் ஆகியோர் அறிக்கையின் மூலம் அளித்த பரிந்துரைகளைக் கலைஞர் நிறைவேற்றமுன்வரவில்லை. ஆனுல் அவற்றில் முக்கியமான சிலவற்றை நிறைவேற்ற இப்பொழுது புரட்சித் தலைவர் முன்வந்துள்ளார்.

## சமூக நீதி

சட்டநாதன் குழுசெய்த பரிந்துரைகளில் மிக முக்கியமானது. "முன்னேற்றமடைந்த பிற்போக்கு சமூகத்தினர்க்கும்பொருளாதாரத்துறையில் மிகவும் பின்னடைந்து நிற்கும் பிற்போக்குப் பிரிவினர்க்கும் சமநிலைஎன்பது ஒரே கோட்டாவில் இருக்க முடியாது" என்பதாகும்.

சட்டநாதன் குழுவின் உறுப்பினரில் ஒருவரான நீதிபதி திரு எஸ். சின்னப்பன் அவர்கள்:

"பிற்படுத்தப்பட்ட சமூகங்களின் பட்டியலை மறுபரிசிலனை செய்து பின் கண்ட வகைகளில் திருத்த வேண்டும்.

1. கணிசமான அளவுக்கு முன்னேறிய சமூகங்களைப் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இருந்து நீக்க வேண்டும்.

2. ஒவ்வொருவகுப்பிலும் மேல் தட்டுப் பிரிவினரை சலுகை பெருதபடி ஒதுக்க வேண்டும்.

3. மிகவும் பின் தங்கியிருக்கும் பலவீனமான பகுதியினரைப் (Weaker Sections)பிரிக்கவேண்டும்.

4. ஒவ்வொரு பிரிவுக்கும் சதவிகித ஒதுக்கீடு செய்யப்படவேண்டும்.

இந்தப் பரிந்துரைகளை மற்றொரு உறுப்பினரான திரு. எம். ஏ. ஜமால் உசைன் அவர்களும் வற்புறுத்தியுள்ளார்.

புரட்சித்தலைவர் அவர்கள் செய்திருப்பது சட்டநாதன் குழுவின் அறிக்கையைப் பொதுப்படையாக ஏற்று- பிற்படுத்தப்பட்ட வகுப்பினர்க்கு என்று இது வரையில் அளிக்கப்பட்டு வந்த 31 சதவிகித ஒதுக்கீட்டைக் குறைக்காமல் கணிசமான அளவுக்குப் பொருளாதாரத்துறையில் முன்னேறிய தனிப்பட்டவர்களை மட்டும்நீக்கிவிட்டு பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கிய பிற்படுத்தப்பட்ட வகுப்பினர்க்கு மட்டும் 31 சதவிகித ஒதுக்கீட்டை அளித்து அறிஞர் அண்ணு அவர்கள் வற்புறுத்திய சமூக நீதியை ஓரளவுக்கு நிலைநாட்டியுள்ளார்.

இவ்வாறு டாக்டர் நாவலர் மன்றம் இதழில் குறிப்பிட்டுள்ளார்.

---

ரயில்வே மாநாடு:

## மாயத்தேவர் பங்கேற்பு

திண்டுக்கல், ஆக. 4- ரயில்வே கன்வென்ஷன் கமிட்டிக் கூட்டம், இந்த மாதம் 7, 8, 9 தேதிகளில் டெல்லியில் நடக்கிறது. இந்தக் கமிட்டியின் உறுப்பினராக மாயத்தேவர் எம். பி. உள்ளார். இந்தக் கமிட்டிக் கூட்டத்தில் கலந்துகொள்வதற்காக நாடாளுமன்ற கழக உறுப்பினர் மாயத்தேவர் டெல்லி செல்கிருர்.



# கடலூரில்
# தந்தை பெரியார் நூற்றாண்டு விழா சிறப்புமலர்



புரட்சித்தலைவருக்கு
இனிய நல்வாழ்த்துக்கள்!

**துரை அன்பரசன்**

தொகுதி அமைப்பாளர்,
அனைத்திந்திய
அண்ணா தி. மு. க.
நெல்லிக்குப்பம்.

★ ★

**J. ஜான்**

அனைத்திந்திய
அண்ணா தி.மு.க.
நெல்லிகுப்பம்.

---

வருகை தரும்
தமிழக முதல்வருக்கு
நல்வாழ்த்துக்கள்!

★

**நியு ஹோட்டல்**
**பிருந்தாவன்**

கடலூர் ரோடு,
பண்ருட்டி.



---

எங்கள் புரட்சித் தலைவரே
வருக! வருக!!



**என். கே. ரங்கநாதன்**

பொதுச் செயலாளர்
தந்தை பெரியார் போக்குவரத்துக்கழக
அண்ணா தொழிலாளர் சங்கம்
மேல் நெமிலி, சாத்தாம்பாடி போஸ்ட்,
செஞ்சிதாலுக்கா,

---

## நல் வாழ்த்துக்கள் !



**எஸ். சஞ்சல்மல்**

ஸ்ரீ பாலாஜி எஞ்ஜினியரிங் ஒர்க்ஸ்,
இரத்ன இலலம,
நெல்லிக்குப்பம், தெ. ஆ. மாவட்டம்.

---

நல்வாழ்த்துக்கள்

★

எஸ். இராஜேந்திரன்
47, ஆல்பேட்டை,
மஞ்சகுப்பம்,
கடலூர் - 1

---

நல்வாழ்த்துக்கள்

★

**ஸ்ரீராம்**
**தியேட்டர்**

பண்ருட்டி

---

நல்வாழ்த்துக்கள்

★

**அன்பு**
**எலட்ரிகல்ஸ்**

48, மெயின் ரோடு
நெல்லிக்குப்பம்

---



## பெரியார் ஒரு சகாப்தம்!

நான் கண்டதும் கேட்டதும் அந்த ஒரே தலைவரைத்தான்!

'மனதிற் பட்டதை எடுத்துச் சொல்வேன்-எது நேரிடினும்!' என்ற உரிமைப் போர், அவருடைய வாழ்வு முழுவதும் அதிலே அவர் கண்ட வெற்றி மிகப் பெரியது. அந்தவெற்றியின்விளைவு அவருக்கு மட்டும் கிடைத்திடவில்லை. இன்று அனைவரும் பெற்றுள்ளனர். அந்த வெற்றியின் விளைவுகளை! இந்தத் தமிழகத்தில் தூய்மையுடன் மனதிற்குச் சரியெனப்பட்டதை எவரும் எடுத்துரைக்கலாம் என்ற நிலை உறுதிப்படுத்தப் பட்டிருக்கிறது. அறிவுப் புரட்சியின் முதல் கட்ட வெற்றி இது; இதற்கு முழுக்கமுழுக்க பொறுப்பாளர் பெரியார்; இந்த வெற்றி கிடைத்திட, அவர் ஆற்றிய தொண்டின் அளவுமிகப்பெரிது;

பெரியாருடைய பெரும் பணியை, நான் ஒரு தனி மனிதரின் வரலாறு என்றல்ல, ஒரு சகாப்தம்-ஒரு காலகட்டம்-ஒரு திருப்பம் என்று கூறுவது வாடிக்கை.

அவர் கண்ட களம் பல. பெற்ற வெற்றிகள் பலப்பல; அவர் தொடுத்த போர்நடந்தபடி இருக்கிறது.

-பேரறிஞர் அண்ணா

---

நல் வாழ்த்துக்கள்

**இநாயத்துல்லா**
**எலட்ரிகல்ஸ்**
**லேத் ஒர்க்ஸ்**

மெயின்ரோடு
மேல்பட்டாம்பாக்கம்
நெல்லிக்குப்பம் தொகுதி

---

நல் வாழ்த்துக்கள்

★

**சித்ரா**
**பேப்பர்**
**ஸ்டோர்ஸ்**

ராஜாஜி ரோடு,
பண்ருட்டி

---

இனிய
நல்வாழ்த்துக்கள்

ஏ. ஆர். தாமோதரன் B.Sc.,

சட்டமன்ற மேலவை
உறுப்பினர்

கடலூர்-1



---

**With Best Compliments**
**From**



★
★ ★

**M. Jayaram**
Proprietor
Murugan Roadways,
Cuddalore - 607001.
Phone: 345

---

தமிழக முதல்வர்,புரட்சித்தலைவரை
மகிழ்ச்சியோடு வரவேற்கின்றோம்



**கண்ணன் பேலஸ்,**

மேல்பட்டாம்பாக்கம்,
நெல்லிக்குப்பம் தொகுதி,
Pin; 607104

---

நல்வாழ்த்துக்கள்

**பம்ப் ஸ்பேர்ஸ்**

162, மெயின் ரோடு,
(போன்: 344)
நெல்லிக்குப்பம்- 607105

(மோட்டார் பம்ப் பால் பேரிங் எலக்ட்ரிக் சாமான்கள், பெயிண்ட் வகைகள், இரும்பு சாமான்கள் வியாபாரம்.)



---



புரட்சித் தலைவரை
அன்புடன்
வரவேற்கின்றேன்

**எம். வேணுகோபால்**
Ex. MC

நகர அமைப்பாளர்,
அனைத்திந்திய அண்ணா திமுக
விழுப்புரம்.

---

தமிழக முதல்வருக்கு இனிய நல்வாழ்த்துக்கள்

**இராதா ஜுவல்லரி**

உரிமை:- K. M. R. ரங்கநாதம் பிள்ளை

வளவனூர், விழுப்புரம் T. K.
R. இராதாகிருஷ்ணன்

அ. இ. அ. தி. மு. க, தலைவர். வீடு அடமான சங்கம்

வளவனூர்

---

நல்வாழ்த்துக்கள்

★

**பி. எம். ஜெயராமன் & சன்ஸ்,**

பருத்தி, விதை, மணிலா & தான்ய வியாபாரம்,
5, கடலூர் ரோடு, பண்ருட்டி-60 7006
போன் : 20

---

பகுத்தறிவு தந்தை பெரியாரின் பிறந்த நாள்
நூற்றாண்டு விழாவினை மாவட்டந்தோறும்
அரசு விழாவாக எடுத்து,
ஆண்டு முழுவதும் கொண்டாட ஆணையிட்ட
தமிழக முதல்வரே! புரட்சி தலைவரே!! வருக! வாழ்க!



**இரா. ஜோதி பிரகாசம்,**

தெ. ஆ. மாவட்ட செயலாளர்,
அண்ணா விவசாய தொழிற் சங்கம்,
பிடாகம் PO., விழுப்புரம் வட்டம்.

---

இனிய
நல்வாழ்த்துக்கள்

**வி. அண்ணாமலை**
**உடையார்**

நகராட்சி சுங்கவரி வசூல்
ஒப்பந்தக்காரர்
நெல்லிக்குப்பம்



---



நல் வாழ்த்துக்கள்

**இரா.**
**பாண்டுரங்கன்**

264 மெயின் ரோடு
நெல்லிக்குப்பம்

---

தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவினை சிறப்பிக்கவ நகை தரும்
பொன்மனச் செம்மலே! புரட்சித் தலைவரே!!
வருக! வாழ்க!!



**கல்யாண்மல் சவுக்கார்**

தலைவர், பான்புரோக்கர் சங்கம்
நெல்லிக்குப்பம்

---

திண்டுக்கல்-சேலம்
அரசினர் மருத்துவமனைகளில்
"ஹோமியோபதி" சிகிச்சைப பிரிவு திறந்த

**புரட்சித்**
**தலைவர்**

பல்லாண்டு வாழ்க
என வாழ்த்துகின்றோம்.

**Dr. V. ஜெயராவ்**

ஈஸ்டர்ன்
ஹோமியோ லாப்ஸ்
நெல்லிக்குப்பம்-607105.



---

பகுத்தறிவு தந்தை பெரியாரின் பிறந்த நாள் நூற்றுண்டு
விழாவினை மாவட்டந்தோறும அரசு விழாவாக எடுத்து
ஆண்டு முழுவதும் கொண்டாட ஆணையிட்ட
**புரட்சித் தலைவரே! வருக! வாழ்க!!**



**"வர்த்தக சங்கம்"**

நெல்லிக்குப்பம்

-கடலூர் இரா. துரைக்கண்ணு

## நல்வாழ்த்துக்கள்

# இராம. ஆதிமூலம்,

செயலாளர்,
அண்ணா
தமிழ் இலக்கியக் கழகம்
மேலவீதி,
சிதம்பரம்.



இனிய நல்வாழ்த்துக்கள்



## M. C. விஸ்வேஸ்வரன்

உப தலைவர்
E. 2652, இரண்டாயிர விளாகம் கூட்டுறவு
விவசாய கடன் சங்கம்
குருவிநத்தம் போஸ்ட், பாகூர் வழி,
கடலூர் தாலுக்கா

## ★ நல்வாழ்த்துக்கள்! ★



ஏ. கே. இராமசாமி, புவனகிரி தொகுதி அவைத்தலைவர், அனைத்திந்திய அண்ணா தி. மு. க. செயற்குழு உறுப்பினர், தமிழ்நாடு வர்த்தகக் கழகம், இணைச் செயலாளர் தெ. ஆ. மாவட்ட மருந்துக் கடைக்காரர்கள் சங்கம்,

## பரணி

மெடிக்கல்ஸ்
புவனகிரி, போன்: 88

நல் வாழ்த்துக்கள்



### கி. காசிநாதன்

இளைஞர் அணி அமைப்பாளர்
அ.இ.அ.தி.மு.க.
வர்மாவீதி, நெல்லிக்குப்பம்

★

### ஆர். சிவபூஷணம்

9-வது வட்ட அமைப்பாளர்
அ.இ.அ.தி.மு.க.
பெரிய சோழவல்லி
நெல்லிக்குப்பம்

தமிழக மின்சார வாரியம்

## ரூ. 14 கோடி கடன் எழுப்புகிறது

சென்னை, ஆக. 4-தமிழ்நாடு மின்சார வாரியம் பத்தாண்டு காலதவணையில் திருப்பித் தரப்படும் ரூ. 14 கோடி மதிப்புள்ள கடன் எழுப்ப முடிவு செய்துள்ளது.

கடன் தொகைக்கு வருடத்திற்கு ஆறேமுக்கால் சதவீதம் வட்டி கொடுப்பதோடு அசல் நூற்றுக்கு நூறு சதவீதமாக திரும்பவும் வழங்கப்படும்.

கடன் பத்திரங்களுக்கான சந்தா பெற்றுக் கொள்வது 1979 ஆகஸ்டு மாதம் ஆரம்பிக்கப்பட்டு 10ம்தேதி அல்லது அதற்கு முன்னதாகவோ நிறுத்தப்படும்.

## சட்டமந்திரிகக்கர் பதவி ஏற்றார்

புதுடெல்லி, ஆக. 4-சட்டமந்திரி கன்னா ராஜினாமா செய்துவிட்டதால் புதிய சட்டஅமைச்சராக எஸ். எம். கக்கர் பதவிஏற்றார். இவர் முன்பு அரசு சட்ட ஆலோசகராக இருந்தவர்.



## இன்று காஞ்சியில் நாஞ்சிலார் பேசுகிறார்

நாள்: 4-8-79 மாலை 7மணி
இடம்: காந்தி ரோடு (தேரடி அருகில்)
தலைமை: காஞ்சி பன்னீர் செல்வம்
பேசுவோர்:
நிதி அமைச்சர்
**நாஞ்சிலார்**
இரா. மோகனரங்கம் எம். பி.
கே. பாலாஜி எம்.எல்-ஏ. பாக்கூர் சுப்பிரமணியம் எம்.எல்.ஏ; ஏ.வீரமணி புலவர் சகாதேவன், ஏ. பி. கண்ணபிரான், மா. அரங்கநாதன், பாலு செட்டி, சபாபதி மற்றும் பலர்.

தமிழ்நாடு அரசு
மருத்துவக்கல்வி இலாகா

## டெண்டர் அறிவிப்பு

1979 - 80ம் ஆண்டில் (1-10-79 முதல் 31-3-80 முடிய) காலத்திற்கு, சென்னை, மருத்துவக் கல்வி இயக்குநர் அவர்களின் அதிகாரத்திற்குட்பட்ட சென்னை - 600 010 அரசாங்ககீழ்பாக்கம் மருத்துவக் கல்லூரி மருத்துவமனைக்கு ஒரு சில மருந்து பொருட்கள் மருந்துகள் மற்றும் மின்சார உபகரண உதிரி பாகங்கள் சப்ளை செய்தல்.

தமிழ்நாடுஅரசு ஆளுநர் அவர்கள் சார்பில் அவர்களுக்காக, சென்னை-600 010, கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி, மருத்துவமனை, டீன்(DEAN) அவர்களுக்கு தேவைப்படும் மருத்துவப் பொருட்கள் மருந்துகள் மின்சார, உபகரண உதிரிப் பொருள்கள் ஆகியவை 1-10-79 முதல் 31-3-80 முடிய உள்ள காலத்திற்கு சப்ளை செய்வதற்கான முத்திரையிட்ட டெண்டர்கள் கீழ் கையொப்பமிட்டவரால் 20-8-79 பிற்பகல் 2 மணி வரை பெற்றுக் கொள்ளப்படும். ஒப்பந்த படிவம், டெண்டர், நிபந்தனைகள் மற்றும் இந்த மருத்துவமனைக்கு தேவைப்படும் மருத்துவ பொருட்கள். மருந்துகள் ஆகியவைகளின் குறிப்புகள், டெண்டர் பத்திரம் ஆகியவைகீழ்கையொப்பமிட்டவரிடமிருந்துரூ5-21க்கு டிராப்ட் செலுத்தி மனுச்செய்து பெற்றுக் கொள்ளலாம். டெண்டர் பத்திரத்துக்கான தொகை பாங்க்டிராப்ட்டாக டீன், கீழ்பாக்கம் மருத்துவக் கல்லூரி மருத்துவமனை அவர்களின் பெயரில் எடுக்கப்பட்டு, சென்னை-600010 ஆயிரம்விளக்கு, ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் பெறப்பட்டதாக இருக்க வேண்டும்.

**Dr. K. ஆறுமுகம் M.D.,**
டீன்,
அரசாங்க கீழ்ப்பாக்கம்
மருத்துவக் கல்லூரி,
மருத்துவமனை,
சென்னை 600 010.
(தமிழ்நாடு அரசு,
ஆளுநருக்காக
அவரது சார்பில்,
அவரது உத்தரவுக்கிணங்க)

Dipr/35244/79/27/maa







'அண்ணா'வில் விளம்பரம் செய்து பயன்பெறுங்கள்



# தந்தை பெரியார் நூற்றாண்டு விழா



## கடலூர்

நாள்: 5-8-1979 இடம்: கடலூர் நகர் மன்றம்

நிகழ்ச்சி நிரல்

காலை 9.00 மணி—துவக்க இசை
10.00 மணி—விழா வரவேற்புரை:
திரு இரத்தின. பாலகுருசாமி, எம்.எல்.சி.

விழாத் தொடக்க உரை:
மாண்புமிகு சமூக நலத்துறை அமைச்சர்
செல்வி **பி.டி. சரசுவதி**

11.00 மணி
கருத்தரங்கம்

தலைமை:
மாண்புமிகு அரிசன நலத்துறை அமைச்சர்
திரு **பெ. சவுந்தரபாண்டியன்**

பங்கு பெறுவோர்:
செய்தி-அறநிலையத்துறை அமைச்சரின் பேரவைச் செயலர்
திரு ஐசரிவேலன் — டாக்டர் பாலச்சந்திரன்
திரு சி. இராமலிங்கம், எம்.எல்.சி. — திரு ஆர்.எஸ். பாண்டியன்
திரு டி.கே. சீனிவாசன் — வழக்கறிஞர் திரு ஏ. பாலகுரு
பேராசிரியர் மா. நன்னன் — திரு ஏ.என். சாமி
திருமதி விசயா முத்துவண்ணன்

நன்றி நவிலல்:
திரு அப்துல் லத்தீப், எம்.எல்.ஏ.

மாலை 4.00 மணி: சிறப்பு அணி வகுப்பு ஊர்வலம்

தந்தை பெரியார் அவர்களின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் கருத்து விளக்க அலங்கார வண்டிகளுடன், என்.சி.சி., சாரணர், ஊர்க்காவல் படையினர், மகளிர், மாணவர் ஆகியோரின் அணிவகுப்பு கடலூர் பழைய நகர் மணிக் கூண்டிலிருந்து புறப்படும்.




மாலை 5.00 மணி
**சிறப்புக் கூட்டம்** இடம்: மஞ்சை நகர் மைதானம்
கலை நிகழ்ச்சி: திரு சி.எஸ். பாண்டியன் குழுவினர்

வரவேற்புரை:
மாண்புமிகு மின்துறை அமைச்சர்
திரு **ச. இராமச்சந்திரன்**

தலைமை:
டாக்டர் நாவலர் **இரா. நெடுஞ்செழியன்**

சிறப்புரை:
மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர்
திரு **கே.ஏ. கிருஷ்ணசாமி**
மாண்புமிகு வருவாய்த்துறை அமைச்சர்
திரு **எஸ்.டி. சோமசுந்தரம்**
மாண்புமிகு வேளாண்மைத்துறை அமைச்சர்
திரு **ப. குழந்தைவேலு**

திண்டிவனம் கே. இராமமூர்த்தி, எம்.எல்.சி.
திரு நெ.து. சுந்தரவடிவேலு
திருக்குறளார் திரு வீ. முனிசாமி — திரு கு. கிருஷ்ணசாமி
டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி — திரு எஸ்.என். சாமிநாதன்
திரு செய்கு தம்பி — திரு ஆர். நக்கீரன்

தந்தை பெரியார் படத்திறப்பு-விழா நிறைவுச் சொற்பொழிவு
மாண்புமிகு முதலமைச்சர்
திரு **எம்.ஜி. இராமச்சந்திரன்** அவர்கள்

நன்றி நவிலல்:
திரு பி.எஸ். பாண்டியன், இ.அ.ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர்

இரவு 10.00 மணி: நாடகம்
தலைமை:
திரு வி.வி. சாமிநாதன், எம்.பி.,
திரு கே.பி. ராஜமோகன் குழுவினரின்—''பெரியார் ஒரு சகாப்தம்''

**அனைவரும் வருக!**

இரா. நெடுஞ்செழியன்.
தலைவர்
தந்தை பெரியார் நூற்றாண்டு விழாக் குழு.

இயக்குநர்
செய்தி-மக்கள் தொடர்புத்துறை

இந்தியாவிலே முதன் முறை

# மாபெரும் பரிசு திட்டம்

முதல் பரிசு **ஒரு வீடு**
2-வது பரிசு: **50 பவுன் தங்க நகை** அல்லது ஒரு புதிய **அம்பாசிடர் கார்**
3 வது பரிசு: **10 பவுன் தங்க நகை** அல்லது ஒரு புதிய **ஸ்கூட்டர்**




## எங்களது பிரகாசம் டெக்ஸ்டைல் சென்டர்

திறப்பு விழாவை முன்னிட்டு எமது கீழ்கண்ட 4 கடைகளில் ஏதாவது ஒரு கடையில் ரூ. 50-க்கு ஜவுளி வாங்கும் ஒவவொருவருக்கும் ஒரு பரிசு கூப்பன் தரப்படும். 25-1-1980-ம் தேதி நடைபெறும் குலுக்கலில் பரிசு கூப்பன்கள் அனைத்தும் குலுக்கிப் போட்டு மேற்கண்ட மூன்று பரிசுகளும் மற்றும் கவர்ச்சிகரமான பயனுள்ள பல பரிசுகளும் வழங்கப்படும்.

உங்கள் பண்டிகை கால துணிகளை புகழ் பெற்ற எங்கள் கடைகளில் வாங்க மறவாதீர்.

பரிசு திட்டம் ஆரம்பித்த தேதி 23-7-1979
பரிசு குலுக்கல் & பரிசளிப்பு 25-1-1980

பிரகாசம் சாரி சென்டர்
பிரகாசம் கிளாத் சென்டர்
அசோகா ரெடிமேட் ஸ்டோர்ஸ்
பிரகாசம் டெக்ஸ்டைல் சென்டர்
(மிக விரைவில் ஆரம்பம்)

பிரகாசம் சர்க்கிள், கோயமுத்தூர்-1 — போன்: 23935 & 34465.

நல் வாழ்த்துக்கள்

## SRINIVASA LUNCH HOME

Coffee & Meals Hotel
14, Court Road, Villupuram.

(சுவையான உணவு வகைகள். சுகாதார முறைப்படி தயாரிக்கப்பட்டது. T. V. வசதியுள்ள உணவு விடுதி தனிப்பட்ட முறையில் கவனிப்பு)

தந்தை பெரியார் விழாவிற்கு வருகை தரும்
தமிழக முதல்வருக்கு
எங்கள் நல்வாழ்த்துக்கள்!

நவ நாகரிக ஜவுளிகளுக்கு சிறந்த இடம்

## இண்டியன் சில்க் பேலஸ்

போன் 519
எம். ஜி. ரோடு : : விழுப்புரம்
கிளை: மஹாராஜா துணிக்கடை, செஞ்சி.

நல்வாழ்த்துக்கள்
★

## ராஜா சைக்கிள் மார்ட்,

2-97 மெயின் ரோடு,
மேல்பட்டாம் பாக்கம்
PIN:-- 607104 நெல்லிக்குப்பம் தொகுதி
எங்களிடம் சைக்கிள்களுக்குத்தேவையான டயர், ட்யூபுகள் மற்றும் உதிரி பாகங்கள் குறைந்த விலையில் கிடைக்கும்.)



நல்வாழ்த்துக்கள்

இன்றைய நாகரீகத்திற்கேற்ப ''ஸ்டீரியோ'' முறையிலும் ''மோனோ''விலும் டேப் பதிவு செய்து டேப்ரிக்கார்டுகள் மூலம் ஒலி பதிவு அமைத்து தருகிறோம்.

## A. C. குமார்

ஸ்டீரியோ சவுண்ட் சிஸ்டம்ஸ்,
ஐயனூர் குளம,
தென்கரை, விழுப்புரம்

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம்சாலை சென்னை-600 014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004. ஆசிரியர்: எம்.ஜி.சக்ரபாணி